அதிகாரிகள் குடுமி உங்கள் கையில்

பாகம் 3



# கிராம பாராளுமன்றம் (கிராம சபை)


டாக்டர்.**நல்வினை.விஸ்வராஜ்**, எம்.ஏ.பி.எல்.,

**க. சதீஸ்குமார்**, பி.ஏ.பி.எல்.,

**கு. பாஸ்கர்**, பி.ஏ.எல்.எல்.பி.,



வெளியீடு

**பத்து ரூபாய் இயக்கம்**

தகவல் உரிமை சட்ட ஆர்வலர்கள் அமைப்பு

சாமானியனுக்கான நீதி

89400 06645, 94456 75801

# கிராம பாராளுமன்றம் (கிராமசபை)

## அதிகாரிகள் குடுமி உங்கள் கையில் பாகம் 3

வெளியீடு:-

பத்து ரூபாய் இயக்கம்

(தகவல் - உரிமை - சட்ட ஆர்வாளர்கள் அமைப்பு)

தலைமை அலுவலகம்

எண் 7 பழைய பேருந்து நிலையம்

இராசிபுரம்- **637408.**

**Girama Paralumanram (Grama Shabhai)**
**Athikarikal Kudumi Ungal Kaiyil Part 3-**
**First Edition: 2022**

**Published by**

**Suba. Karthikeyan B.E.,L.L.B.,**

**Tamilnadu State Organizer.**

**Ten Rupee Movement, Head Office No 7 Old Bus Stand,**

**Rasipuram- 637408**



**பொறுப்பு துறப்பு :** இந்த புத்தகம் முழுமையாக கவணமாக எவ்வித குறைபாடுமின்றி முழு அர்பணிப்புடன் தயாரிக்கப் பட்டுள்ளது. ஏதேனும் தவறுகள் குற்றம் குறைகள் இருப்பின் ஆசிரியர் வெளியீட்டாளர் அச்சகர் பொறுப்பாக மாட்டார்கள்.

## சமர்பணம்

கிராம சபைக் கூட்டத்தில் கேள்வி கேட்டதால், கிராம சபைக் கூட்டத்தில் தீர்மானங்கள் கொண்டு வந்தால், ஊழல் ஒழிப்பு கிராம வளர்ச்சிக்கு கிராம சபை கூட்டத்தை பயன்படுத்தி இரத்தம் சிந்திய சமூக ஆர்வாளர்களுக்கு இந்த புத்தகத்தை சமர்பிக்கின்றோம்.

## நன்றி

கிராம சபை பற்றிய விழிப்புணர்வை தமிழகத்தில் தொடர்ந்து உண்டாக்கி வரும் **CM Cell**ஜான்சன், தன்னாட்சி நந்தகுமார், பேராசிரியர் க.பழனிதுரை உள்ளிட்ட கிராம ஆர்வாளர்களுக்கு

நன்றி ! நன்றி !! நன்றி !!!

# முன்னுரை

இந்திய அரசியலைப்பு சட்டத்தால் உருவாக்கப்பட்ட மக்களாட்சியின் அடிப்படை அடித்தள அமைப்பு கிராமசபை ஆகும். மாநிலங்களுக்கு சட்டமன்றம், அகில இந்திய அளவில் மைய அரசுக்கு பாராளுமன்றம் போன்று கிராம அளவில் கிராம சபை அமைப்பானது மிகவும் அதிகாரம் மிக்கது. சட்டமன்றத்திற்கு எவ்வாறு மாநில அரசின் அமைச்சரவை கட்டுப்பட்டதோ, பாராளுமன்றத்திற்கு எவ்வாறு மத்திய அரசின் அமைச்சரவை கட்டுப்பட்டதோ அதே போல கிராம ஊராட்சி மன்றம் கிராம சபைக்கு கட்டுப்பட்டது. எவ்வாறு நாடாளுமன்ற கூட்டங்களில் சட்டமன்ற அதன் உறுப்பினர்கள் கேள்விகளுக்கு பதில் அளிக்க வேண்டிய கடமையுள்ளதோ அதே போல கிராம சபையில் கிராமத்தில் உள்ள வாக்காளர்களுக்கு ஊராட்சி மன்ற தலைவர்களும், அரசு அலுவலர்களும் பதில் அளிக்க கடமைப் பட்டவர்கள் ஆவார்கள்

கிராமசபை கிராமத்தின் பாராளுமன்றம் போன்றது. இந்திய உச்ச நீதிமன்றம் கிராம சபையானது மக்களவைக்கு இணையானது என்று தெளிவுப் படுத்தி உள்ளது.

கிராம சபை கூட்டத்தின் மூலமாக மட்டுமே மத்திய மாநில அரசுகளின் திட்ட பயனாளிகளை தேர்வு செய்ய இயலும். கிராமத்தின் நிதிநிலை (பட்ஜெட்) அறிக்கைக்கு கிராம சபை மட்டுமே அங்காரம் அளிக்க இயலும். கிராம வளர்ச்சி திட்ட அறிக்கையை கிராம சபை மட்டும் தான் தயார் செய்து அங்கிகரிக்க வேண்டும். ஊராட்சியின் ஆண்டு கணக்கு தணிக்கை அறிக்கையை . கிராம

சபையின் பார்வைக்கு வைத்து ஒப்புதல் பெற வேண்டிய நிர்பந்தமும் உள்ளாட்சி துறைக்கு உள்ளது.

கடந்த காலங்களில் கோமாரி நோயை கட்டுப்படுத்துவது ஊட்டசத்து குறைப்பாட்டினை களைதல் போன்ற பிரச்சினைகளை கிராம சபைக் கூட்டங்கள் மூலமாக பொதுமக்கள் ஆதரவுடன் பிரச்சினையை தமிழக அரசு எதிர்கொன்டு வெற்றிப்பெற்றுள்ளது.

இவை மட்டுமல்லாமல் அரசின் பல்வேறு நலத் திட்டங்களை எடுத்துக்காட்டாக ரேசன் கடைகள் கூட்டுறவு சங்கங்கள் முதியோர் உதவி தொகை போன்ற சமூக நல உதவி திட்டங்கள் போறவற்றை தணிக்கை செய்யவும் கிராம சபைகளுக்கு அதிகாரம் தற்சமயம் படிப்படியாக வழங்கப்பட்டு வருகின்றது. உச்சபட்சமாக எதிர்காலத்தில் அரசு கிராமங்களுக்கு செலவு செய்யும் ஒவ்வொரு ரூபாயும் கிராம சபையில் தணிக்கை செய்யும் சட்ட அங்கிகாரம் கிராம மக்களுக்கு கிடைக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை உள்ளது.

தற்சமயம் சடங்கு சம்பிரதாய கூட்டமாக மட்டுமே நடந்து வரும் கிராம சபைக் கூட்டங்கள் எதிர்காலத்தில் நிச்சயமாக ஆக்கபூர்வமான விவாதங்கள் நடக்கும் மக்கள் மன்றமாகவும், கிராமத்தின் தலையெழுத்தையே தீர்மானிக்கும் தீர்மானங்கள் இயற்றும் மன்றமாகவும், தேசத்தின் பொருளாதாரத்தை மாற்றும் திட்டங்கள் தீட்டும் பேரவையாகவும் கிராம சபைகள் நிச்சயம் மாறும் இளைஞர்கள் விவசாயிகள் தொழிலாளர்கள் பங்கேற்பில் என்பது நிச்சயம்

# கிராம சபை சட்ட வரலாறு

இந்தியாவில் அரசியல் அமைப்புச் சட்ட 73-வது திருத்ததிற்கு பிறகே உள்ளாட்சி அமைப்புகளுக்கு மிகப்பெரிய அதிகாரங்கள் கிடைத்துள்ளது. ஆனால் தமிழகத்தில் அதற்கு மிக நீண்டகாலம் முன்னதாகவே வெள்ளையர்கள் ஆட்சியில் 1871 மெட்ராஸ் உள்ளாட்சி நிதிச் சட்டம் 1884 மெட்ராஸ் உள்ளாட்சி மன்ற சட்டம் 1920 மெட்ராஸ் உள்ளாட்சி மன்ற சட்டம் ஆகியவை மூலமாக உள்ளாட்சி அமைப்புகள் இயங்கியுள்ளன விடுதலைக்கு பிறகு தமிழகத்தில் 1950 மெட்ராஸ் பஞ்சாயத்து சட்டமும் 1958 மெட்ராஸ் பஞ்சாயத்து சட்டமும் இயற்றப்பட்டு பலமுறை தேர்தல் நடந்துள்ளது. பிறகு இந்திய அரசியல் அமைப்புச் சட்ட 73-வது திருத்ததிற்க்கு பிறகு அதை தொடர்ந்து 1994-ல் தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் இயற்றப்பட்டு 22.04.1994 -ல் நடைமுறைப் படுத்தப் பட்டுள்ளது.

இந்திய அரசியல் அமைப்புச் சட்ட 73-வது திருத்ததில் மிகமுக்கிய அம்சமாக கிராம சபை என்ற அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது.

அகில இந்திய அளவில் உள்ளாட்சிக்கு அதிகாரங்களை பரவலாக்கல் தொடர்பாக

1882- ஸ்தல சுயாட்சி தீர்மானம்

1907-ல் மன்னர் குழு அறிக்கை

1957 பல்வந்தராய் மேத்தா குழு அறிக்கை

ஆகியவற்றில் உள்ளாட்சிக்கு அதிகாரங்கள் வழங்கல்

பற்றிய விவாதங்கள் நடந்துள்ளது. இந்திய அரசியல் சட்டத்தை வடிவமைத்த இந்திய அரசியல் நிர்னய சபையில் கிராம சுயாட்சி உள்ளாட்சிகளுக்கு சுயாட்சி பற்றி மிகப்பெரிய அளவில் விவாதங்கள் நடைபெறுள்ளன.

இந்தியா வெள்ளைக்காரர்களிடம் அடிமைப்பட்டு இருந்த சூழலில் சென்னை மாகான கவர்னராக பதவியில் இருந்த மதிப்பிற்குரிய ரிப்பன் பிரபு அவர்கள் உள்ளாட்சியில் மக்களை பங்கேற்க செய்த மகத்தான சேவைக்காக மக்கள் அவரை "ரிப்பன் எங்கள் அப்பன்" என்று புகழ்த்தோடு நில்லாமல் சென்னை மாநகராட்சி அலுவலகம் அமைந்துள்ள கட்டிடத்திற்க்கு "ரிப்பன் மாளிகை" என்ற பெயரையும் சூட்டியுள்ளார்கள்.

தமிழகத்தில் உள்ளாட்சிகள் தொடர்பான முந்தைய முக்கிய சட்டங்கள்

மதராஸ் பஞ்சாயத்து சட்டம் 1950

மதராஸ் மாவட்ட வளர்ச்சி மன்றச் சட்டம் 1958

தமிழகத்தில் உள்ளாட்சி துறையின் அதிகாரங்களை தீர்மானிக்கவும் உள்ளாட்சியை சீரமைக்கவும் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன அவறில் முக்கிய சிலவற்றை காண்போம்

**1957** பல்வந்த்ராய் மேத்தா குழு

**1963** கே.சந்தானம் குழு

**1978** அசோக் மேத்தா குழு

**1985** ஜி.வி.கே.ராவ் குழு

**1986** எல்.எம்.சிங்வி குழு-

**1997** மாநிலத் திட்டக்குழு முழுநேர உறுப்பினர் எல்.சி. ஜெயின் தலைமையிலான முதல் உயர் நிலைக்குழு

**1999** ஊரக வளர்ச்சி மற்றும் உள்ளாட்சித் துறை அமைச்சர் கோ. சி. மணி தலைமையிலான இரண்டாவது உயர்நிலைக்குழு

**2007** உள்ளாட்சி துறை அமைச்சர் மு.க.ஸ்டாலின் தலைமையில் மூன்றாவது உயர்மட்ட குழு

ஆகியவை உள்ளாட்சிகள் தொடர்பாக அமைக்கப்பட்டுள்ள குழுக்கள் இவைகளின் முயற்ச்சிகள் அறிக்கைகள் மூலமாக பலவகையில் உள்ளாட்சிகள் தொடர்பான மாற்றங்கள் உருவாகியுள்ளது

**22.01.2007-ல்** அன்றைய உள்ளாட்சி துறை அமைச்சர் திரு மு.க.ஸ்டாலின் தலைமையில் உயர்மட்ட குழு அமைக்கப்பட்டு **7.3.2007** -ல் முதல் கூட்டத்தை கூட்டி பல அமர்வுகளில் பல இடங்களில் கூட்டங்கள் மாநாடுகள் கலந்தாய்வுகள் நடத்தி இறுதியில் **06.12.2007-ல்** தன்னுடைய பரிந்துறைகளை வழங்கியுள்ளது. இந்த குழுவின் அறிக்கையை நடைமுறைப்படுத்த அரசு வெளியிட்ட **50-க்கும்** மேற்பட்ட அரசாணைகள் இன்றுவரை நடைமுறையில் உள்ளன.

அனால் உலக வரலாற்றில் மக்களாட்சி பல நாடுகளில் பலவகையில் உருவாகி கிரேக்க மக்களாட்சி பிரன்ஸ் மக்களாட்சி என்றொல்லாம் பேசப்பட்டாலும் அவற்றிற்கு மேலாக அதிகாரமிக்க உண்மையான மக்கள் அதிகார ஆட்சியாக தமிழகத்தில் சோழர்கள் காலத்தில் கிராம சபை அதிகாரம் கொன்டிருந்ததை உத்திரமேரூர் கல்வெட்டுகள் உலகிற்கு வரலாற்று ஆவணமாக எடுத்துக்காட்டி வருகின்றது. சோழர்கள் ஆட்சி வரை

உன்னத நிலையில் இருந்த கிராம உள்ளாட்சிகளின்

அதிகாரங்கள் பின்னர் அதிகாரமிழந்து மீண்டும் ஆங்கிலேயர் ஆட்சியில் இருந்து படிப்படியாக சிறிது சிறிதாக அதிகாரம் பெற்று இந்திய அரசியலமைப்பு சட்டத்தின் 73-ம் திருத்தம் மூலமாக 1992-ல் மீண்டும் முக்கியத்துவம் பெற்றுள்ளது.

# கிராம சபை சிறப்பம்சங்கள்

- சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற நிலையை நடைமுறைபடுத்திய முதல் இடம் கிராம சபையே. சாதாரன மனிதனும் ஜனாதிபதியும் சரிநிகர்சமமாக அமர்ந்து பேசும் ஒரே இடம் கிராம சபை.

  பெண்களுக்கு அதிகாரம் அளிக்கும் இடம் கிராம சபை.

  பட்டியல் இனத்தவருக்கு அதிகாரம் அளிக்கும் இடம் கிராம சபை.

  கிராம சபை தீர்மானத்தை இரத்து செய்ய கிராமசபைக்கு மட்டுமே அதிகாரம்.

  சாமான்ய மனிதனாலும் கேள்வி கேட்க முடியும்.

  எளிய மனிதனாலும் தீர்மானத்தை கொண்டுவர முடியும்.

  அனைத்து துறை அதிகாரிகளையும் கிராமத்தில் ஒருசேர கூட்டி வைக்கும் சபை.

  அனைத்து துறை அதிகாரிகளையும் கிராமத்தில் மக்களுக்கு பதில் சொல்ல வைக்கும் சபை.

- 73வது இந்திய அரசியலமைப்பு திருத்த சட்டம் 1992, தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம், 1994 ஆகியவற்றின் பல முக்கியக் கூறுகளில் கிராம சபையும் ஒன்றாகும்.

- இந்திய அரசியலமைப்பு திருத்தச் சட்டம் 1992 சட்டப்பிரிவு 243 (ஆ) மற்றும் 243 (a)-ன்படி கிராமத்தை சேர்ந்த வாக்காளர் பட்டியலில் பதிவு செய்யப்பட்ட நபர்கள் அடங்கிய ஒரு குழுமம் கிராம சபை ஆகும்.
- மத்திய அரசு 1999-2000 ஆண்டினை கிராமசபை ஆண்டாக, சமூதாய தணிக்கை ஆண்டாக அறிவித்துள்ளது.
- கிராமசபையே அரசியல் சாசன அதிகாரத்துடன் கூடிய ஒரு சமூக தணிக்கையாகும்.
- கிராம அளவில் தேவையான அதிகாரங்களையும் செயல்முறைகளையும் சட்ட மன்றத்தின் சட்டம் இயற்றல் மூலம் ஒரு கிராமசபை பயன்படுத்தி நடைமுறை படுத்தலாம்.
- சிற்றூராட்சியின் பரப்பிற்குள் அடங்கிய, வாக்காளர் பட்டியலில் பதிவு செய்யப்பட்ட நபர்களை கொண்ட ஒரு அமைப்பாக கிராம சபை ஒவ்வொரு ஊராட்சியிலும் இருக்கும்.

# கிராம சபை நோக்கம்

- திட்டமிடுதல், செயல்படுத்துதல், கண்காணித்தல் ஆகியவை மூலம் வளர்ச்சித் திட்டங்களில் பொதுமக்களை நேரடியாக ஈடுபடுத்தி, வெளிப்படையான நம்பகத் தன்மை கொண்ட ஊராட்சி நிர்வாகத்தைக் கொண்டுவருவது இதன் நோக்கமாகும்.
- ஒவ்வொரு கிராம ஊராட்சியிலும் அடித்தள மக்களாட்சி அமைப்பாகச் செயல்படுவது கிராமசபையாகும்.
- வெளிப்படையான/பொறுப்பான நிர்வாகத்தை ஊக்கு வித்தல்
- அனைத்து வாக்காளர்களும் பங்கேற்கும் அமைப்பு
- கிராம அளவில் திட்டங்களைத் திட்டமிடலும் செயல்படுத்துதலும்
- முடிவெடுப்பதில் பொதுமக்கள் நேரடியாகப் பங்கேற்பதை ஊக்குவித்தல்
- ஊராட்சியின் நிதி வருவாயைப் பெருக்க வழிமுறை களைக் கண்டறிதல் சமூக பங்களிப்பினை தொகையாக, உடல் உழைப்பாக அளிப்பதை ஊக்குவித்தல்
- சமூக நல்லிணக்கத்தை ஏற்படுத்துதல்.
- பயனாளிகளைத் தேர்வு செய்தல்
- சமூக தணிக்கைக்கு வழிவகுத்தல்
- அனைத்து தரப்பு மக்களின் அனுபவ பகிர்வினை கொண்டு திட்டம் தீட்டுதல்.

## கிராம சபைக் கூட்டத்தை யார் கூட்ட வேண்டும்

கிராம சபைக் கூட்டத்தை கிராம ஊராட்சி மன்ற தலைவர் கூட்ட வேண்டும். ஊராட்சி மன்ற தலைவர் கூட்டத்தை கூட்ட தவறினால் ஊராட்சிகளின் ஆய்வாளரான மாவட்டாட்சியர் கிராம சபைக் கூட்டத்தை கூட்ட அதிகாரம் படைத்தவர் ஆவார்.

அவ்வப்போது அரசு அல்லது ஊராட்சிகளின் ஆய்வாளரான மாவட்டாட்சியர் அறிவிக்கை வாயிலாக கிராம சபை கூட்டத்தை கூட்டுவார்கள்.

வருடத்திற்கு இரண்டு முறை சமூக தணிக்கைக்கான கிராம சபைக் கூட்டம் கூட்டப்படும். கட்டாயம் ஒருமுறை சமூக தணிக்கைக்கான கிராம சபைக் கூட்டம் கூட்டப்படும்.

- (தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் **1994,** சட்டபிரிவு **6(3)** கிராம சபை கூட்டம் கிராம ஊராட்சி தலைவரால் கூட்டப்பட வேண்டும். தலைவர் இல்லாத நிலையில் துணைத்தலைவர் இக்கூட்டத்தைக் நடத்துவார். தலைவர் கூட்டத்தைக் கூட்டத் தவறினால் ஊராட்சிகளின் ஆய்வாளர் (மாவட்ட ஆட்சித்தலைவர்) கூட்டத்தை நடத்துவார்
- தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் **1994** சட்டபிரிவு **46 1) (a)** கிராம சபை கூட்டங்களை கூட்டுவது ஊராட்சித் தலைவரின் அலுவல்களில் ஒன்றாகும்.

# கிராமசபை கூட்டம் நடக்கும் இடம், நாள், நேரம்

## கிராமசபை கூட்டம் நடக்கும் இடம், நாள், நேரம்

கிராமசபை கூட்டம் அந்த கிராம ஊராட்சிக்கு உட்பட்ட ஏதாவது பொது இடத்தில் நடத்தப்பட வேண்டும்.

கிராமசபை கூட்டம் அந்த கிராம ஊராட்சிக்கு உட்பட்ட ஒவ்வொரு வார்டிலும் சுழற்சி முறையில் கட்டாயம் நடத்தப்பட வேண்டும்.

அரசு அல்லது ஊராட்சிகளின் ஆய்வாளரான மாவட்டாட்சியர் சிறப்பு அறிவிக்கை மூலம் அறிவித்தாலன்றி கிராமசபை கூட்டம் அலுவலக விடுமுறை நாட்களிலோ பொது விடுமுறை தினங்களிலோ நடத்தக்கூடாது.

கிராமசபை கூட்டம் சுமார் காலை **11.00** க்கு துவங்கப்பட வேண்டும்.

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் **1998** விதி எண்: **2**

**Tamil Nadu Grama Sabha (Quorum and Procedure for Convening and Conducting of Meetings) Rules, 1998. Rull 2. Venue and day of the meeting - The Grama Sabha in every Village Panchayat shall meet at a public place within the limits of the Village Panchayat. Meeting shall be held on official working day. No meeting shall be held on public holidays, unless specially notified by the Inspector, or by the Government.**

தமிழ்நாடு கிராம சபை ( குறைவெண், கூட்டம் கூட்டுதல், மற்றும் நடத்துதல்) திருத்த விதிகள் 2006 எண்: 2

**Amendment To The Tamil Nadu Grama Sabha (Quorum and Procedure for Convening and Conducting of Meetings) Rules 1998 (GO 130) Rule 2. Venue, day and time of meeting - The Grama Sabha in every Village Panchayat shall meet at a public place within the jurisdiction of the Village Panchayat in each of the Ward by rotation on the date appointed by the President of the Village Panchayat or as the case may be, the Inspector at 11.00 a.m. on any working day. No meeting shall be held on any public holiday, unless specifically notified in this behalf by the Inspector, or the Government**

தமிழ்நாடு கிராம சபை ( குறைவெண், கூட்டம் கூட்டுதல், மற்றும் நடத்துதல்) திருத்த விதிகள் 2006 எண்:2 - திருத்தம் - ஊராட்சியின் எல்லைக்குள் அமைந்த ஒவ்வொரு வார்டிலும் சுழற்சி முறையில் ஊராட்சியின் ஆய்வாளரால் கிராம சபை நடத்த நிர்ணயிக்கப்பட்ட நாளில் காலை முற்பகல் 11 மணிக்கு கிராமசபை நடத்தப்பட வேண்டும்.

# அறிவிப்பு விளம்பரம்

கிராமசபை கூட்டம் நடத்துவதற்கு 7 நாட்கள் முன்னதாக கிராம சபை கூட்டம் நடைபெறும் நாள் இடம் கூட்ட நோக்கம் (கூட்ட பொருள் - அஜென்டா) அடங்கிய கிராம சபைக் கூட்ட அறிவிப்பினை கட்டாயம் வெளியிட வேண்டும்.

கிராமத்தில் முக்கிய இடங்களில் விளம்பரங்கள் செய்வது மூலமாகவும், தண்டோரா மூலமாகவும்,

துண்டு பிரசுரங்கள் மூலமாகவும் பொதுமக்களுக்கு கிராம சபை உறுப்பினர்களுக்கு தகவல் வழங்க வேண்டும்.

இவற்றை ஊராட்சிமன்ற தலைவர் செய்ய வேண்டும்

கிராம சபை கூட்ட விளம்பரங்களை ஊராட்சி மன்ற உறுப்பினர்கள், பொதுமக்கள், அரசு சாரா தொண்டு நிறுவனங்கள் சுய உதவிக்குழுக்கள், யார்வேண்டுமானாலும் செய்யலாம்.

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் 1998 (விதி எண் 3 குறைந்தபட்சம் 7 நாட்களுக்கு முன்பாக கிராம சபை கூட்டம் குறித்த அறிவிக்கை தலைவரால் வெளியிடப்பட வேண்டும். தண்டோரா மற்றும் துண்டு பிரசுரங்கள் மூலம் தகவல் தெரிவிக்க வேண்டும். முக்கிய இடங்களில் விளம்பரம் செய்ய வேண்டும்.

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No**

**3. Notice - For holding meeting of the Grama Sabha not less than seven clear days notice prior to the date and time of the meeting and of the subjects to be deliberated shall be given in the manner specified below -**

- **i.** **by beat of drum in all the habitations of the Village Panchayat announcing the place, date, hour and agenda of the meeting;**
- **ii.** **by a written intimation of the meeting to be displayed by affixure in the office of the Village Panchayat and in a few other conspicuous public places such as school building, noon - meal center, television room, Village temple, over - head tank and so on; and**
- **iii.** **a copy of the notice and the agenda shall be sent to the Inspector not less than seven clear days before the date of the meeting.**

# கூட்டப் பொருள் (அஜென்டா)

எந்த ஒரு கூட்டமாக இருந்தாலும் அந்த கூட்ட எதாவது ஒரு நோக்கத்துடன் குறிக்கோளுடன் கூட்டப்படும், கூட்டம் எந்த நோக்கத்திற்காக என்ன பொருள் தொடர்பாக நடக்க உள்ளது என்கின்ற விசயமே அஜன்டா என்ற வடமொழி சொல்லில் சொல்லப்பட்டு வழக்கத்தில் உள்ளது. இதை எலிய தமிழில் கூட்ட பொருள் என்று பயன்படுத்தலாம்.

கூட்டம் எங்கு நடைபெற உள்ளது, என்றைய தினம், எத்தனை மணிக்கு துவங்கி நடைபெற உள்ளது, யாருடைய தலைமையில் யாருடைய முன்னிலையில் சிறப்பு விருந்தினராக யார் யார் கலந்துக் கொள்ள உள்ளார்கள் என்ன பொருள் (கூட்ட நோக்கம் அஜென்டா) பற்றி கூட்டம் நடைபெற உள்ளது, யார் யார் எல்லாம் கூட்டத்தில் பங்கு பெறலாம் கலந்துக்கொள்ளலாம், தோராயமாக எத்தனை மணிக்கு கூட்டம் நிறைவடைய உள்ளது என்ற விபரங்கள் கூட்டத்தின் நிகழ்ச்சி நிரல் என்றழைக்கப்படும். இதில் உள்ள பொருள் மட்டுமே அஜென்டா ஆகும்.

கிராமசபை கூட்டம் தொடர்க கிராம ஊராட்சிமன்ற ஆலோசனையுடன் கூட்டப் பொருளை கிராம ஊராட்சி மன்ற தலைவர் முடிவு செய்ய வேண்டும்.

கடந்தகாலங்களில் நடைபெற்ற கிராமசபைக் கூட்டத்தில் நிறைவேற்றபட்ட தீர்மானங்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் விபரமும் இந்த கிராமசபைக் கூட்ட பொருளில் இடம் பெற வேண்டும். ஏற்கனவே நடைபெற்ற கிராமசபைக் கூட்டத்தில் நிறைவேற்றபட்ட தீர்மானங்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் விபரமும் அதன் மேல் எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கை பற்றிய விபரங்களை

ஊராட்சி மன்ற தலைவர் கிராம சபை கூட்டத்தில் படிக்க வேண்டும்

கிராம ஊராட்சிகளின் ஆய்வாளரான மாவட்டாட்சி தலைவர், தமிழக அரசு அவ்வப்போது குறிப்பிட்ட விசயம் தொடர்பாக கிராம சபைக் கூட்டத்தை கூட்ட அறிவுரை வழங்கும். கூடுதலாக வேறு என்ன விசயங்களை கூட்ட பொருளில் சேர்க்க வேண்டும் என்பதை கிராம ஊராட்சி அறிவுரையுடன் ஊராட்சி மன்ற தலைவர் முடிவு செய்யலாம்.

கிராம சபைக் கூட்டத்தில் கூட்ட தலைவர் அனுமதி பெற்று கிராம சபை உறுப்பினர்கள் முன்மொழியும் (தீர்மானங்களையும்) விசயங்களையும் கூட்ட பொருளாக வைத்து விவாதத்திற்கு விட்டு பொரும்பான்மை கிராம சபை உறுப்பினர்கள் ஆதரித்தால் தீர்மானமாக நிறைவேற்ற வேண்டும்.

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் 1998 (விதி எண் 6 : உள்ளாட்சியின் ஆலோசனையுடன் கூட்டப் பொருளை கிராம ஊராட்சி தலைவர் ஆய்வு செய்ய வேண்டும். இதில் சென்ற கூட்ட முடிவின் மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கை விவரமும் இடம்பெற வேண்டும்.

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No 6. Agenda - The agenda for the meeting shall be prepared by the President in consultation with the Village Panchayat. It shall include a report on the action taken on the decisions of the previous meeting of the Grama Sabha.**

# கூட்ட தலைமை

கிராம சபைக் கூட்டத்தை கிராம ஊராட்சி மன்ற தலைவர் தாங்கி நடத்த வேண்டும். ஊராட்சி மன்ற துணைத் தலைவர் இல்லாத நிலையில் கிராம சபைக் கூட்டத்தை கிராம ஊராட்சி மன்ற தலைவர் தாங்கி நடத்த வேண்டும்.

இருவரும் கூட்டத்திற்கு வருகைதரா நிலையில் கூட்டத்தை தலைமையேற்று வழி நடத்தலாம்.

தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் **1994,** சட்ட பிரிவு **3 (6)** கிராம சபை கூட்டம் கிராம ஊராட்சி தலைவரால் கூட்டப்பட வேண்டும். தலைவர் இல்லாத நிலையில் துணைத்தலைவர் இக்கூட்டத்தைக் நடத்துவார். தலைவர் கூட்டத்தைக் கூட்டத் தவறினால் ஊராட்சிகளின் ஆய்வாளர் (மாவட்ட ஆட்சித்தலைவர்) கூட்டத்தை நடத்துவார்

**THE TAMIL NADU PANCHAYATS ACT, 1994 Sec : 3 (6) Every meeting of the Grama Sabha shall be presided over by the President and in his absence, by the Vice President and in the absence of both the President and Vice President, by a member chosen by the members present at the meeting.**

# பற்றாளர் பார்வையாளர் (Nodel Officer)

கிராம சபை கூட்டத்தில் மாவட்டாட்சியர் சார்பில் கலந்துக் கொன்டு கொண்டு கூட்டத்தில் நடைபெற்ற விசயங்களை மாவட்டாட்சியருக்கு எடுத்துச் செல்லும் அரசு அலுவலரே பற்றாளர் ஆவார். பார்வையாளர் என்று இவரின் அதிகாரத்தை சுருக்கிவிட இயலாது அதே நேரத்தில் இவருக்கு கிராம சபைக் கூட்டத்தில் வாக்களிக்கும் அதிகாரமோ முடிவெடுக்கும் அதிகாரமோ இல்லை. **Watch Dog** என்ற நிலையில் அவரின் அதிகாரம் இருக்கும்.

ஊராட்சிகளின் ஆய்வாளராகிய மாவட்டாட்சி தலைவர் கிராமசபை கூட்டத்தை கண்காணிக்க அவர் (மாவட்டாட்சியர்) சார்பில் வட்டார வளர்ச்சி அலுவலர் (பிடிஓ) அந்தஸ்திற்கு குறையாத பல்வேறு துறை அலுவலர்களை ஒவ்வொரு கிராம ஊராட்சிக்கும் பற்றாளராக அனுப்பி வைக்க வேண்டும்.

1. பற்றாளர் குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னதாக கூட்டம் நடைபெறும் இடத்தில் இருக்க வேண்டும்.
2. கிராம சபை கூட்டத்தை முழுமையாக கண்காணிக்க வேண்டும்.
3. கிராமசபை கூட்டம் முடியும் வரை கூட்டத்தில் கட்டாயம் இவர் இருக்க வேண்டும்
4. கிராம சபை கூட்ட வருகை பதிவேட்டில் கையொப்பம் செய்ய வேண்டும்.
5. கிராம சபைக் கூட்டம் முடிவடைந்த 72 மணி நேரத்திற்குள் பற்றாளர் தன்னுடைய அறிக்கையை மாவட்டாட்சியருக்கு கட்டாட்யம் அனுப்பி வைக்க வேண்டும்.

தமிழ்நாடு கிராம சபை (கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் **1998** விதி எண்: **8** கிராம சபை கூட்டம் நடைபெறுவதைக் கண்காணிக்க மாவட்ட ஆட்சித் தலைவர்/ஆய்வாளர் பார்வையாளரை நியமனம் செய்யலாம்.

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No 8. Observer of the meeting - Where the meeting of the Grama Sabha has been convened by the Inspector, the Inspector shall have right to send an officer not below the rank of Block Development Officer as observer who shall submit a report to Inspector within seventy two hours of the completion of the Grama Sabha meeting**

# கிராம சபைக் கூட்ட முடிவுகளை செயல்படுத்துதல் (தொடர் நடவடிக்கை)

# கிராம சபைக் கூட்ட முடிவுகளை நடைமுறைப்படுத்துதல்

# (தொடர் நடவடிக்கை)

கிராமசபை கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டுள்ள தீர்மானங்களை செயல்படுத்த நடைமுறைப்படுத்த வேண்டிய கடமை கிராம ஊராட்சிக்கு உள்ளது. மற்ற அரசு துறை சார்ந்த விசயங்களில் கிராமசபை கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டுள்ள தீர்மானங்களை சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு செயல்படுத்த நடைமுறைப்படுத்த வேண்டிய கடமை சம்பந்தப்பட்ட அரசு துறைகளுக்கு உள்ளது. உரிய மேல்நடவடிக்கைகளை எடுத்து அதன் விபரங்களை கிராம ஊராட்சிகளுக்கு தெரிவிக்க வேண்டும். அத்தகைய விபரங்களை ஊராட்சிமன்ற தலைவர் அறிந்து கிராம சபையில் தெரிவிக்க வேண்டும்.

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் **1998** விதி எண் **9 :** ஏற்கனவே கடந்த காலத்தில் நடைபெற்ற கிராம சபை கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள் திர்மானங்கள் மீது என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளது, எடுக்கப்பட்ட நடவடிக்கைள் என்ன அதில் உள்ள முன்னேற்றங்கள் பற்றிய விபரங்களை கிராம சபை கூட்டத்தில் தொடர் நடவடிக்கை எடுப்பதற்காக படிக்கப்பட வேண்டும்.

# வருகை பதிவேடு

எந்த ஒரு கூட்டம் நடைபெற்றாலும் அந்த கூட்டத்திற்கு வருகை புரிந்து கலந்துக் கொண்டவர்கள் பெயர் விபரம் கையொப்பம் பெறுவதற்கான உரிய வகையில் வருகை பதிவேடு பராமரிக்க வேண்டும்.

கிராம சபைக் கூட்டத்தில் பங்கேற்பவர்கள் கையொப்பம் பெறுவதற்காக தனியாக வருகைப்படிவேட்டினை கிராம ஊராட்சி நிர்வாகம் பராமரிக்க வேண்டும்

கிராம ஊராட்சிகள் தொடர்புடைய பின்வரும் வருகை பதிவேடுகள் எதையும் கிராம சபை கூட்டத்தின் வருகை பதிவேடாக பயன்படுத்தக் கூடாது

**(1)** கிராம ஊராட்சிகளில் ஊராட்சி மன்றத்தின் அனைத்து வகையான கூட்டங்களில் (இயல்பு கூட்டம் அல்லது சாதாரன கூட்டம் அவரசக் கூட்டம் சிறப்புக் கூட்டம்) ஊராட்சி மன்ற உறுப்பினர்கள் பங்கு பெறுவது தொடர்பான வருகை பதிவேடு உள்ளது.

**(2)** கிராம ஊராட்சி தொடர்புடைய குழுக்களின் வருகை பதிவேடுகள்.

**(2)** கிராம ஊராட்சியில் உள்ள வறுமை ஒழிப்பு சங்க செயற்குழு பொதுக்குழு வருகை பதிவேடுகள்

**(2)** கிராம ஊராட்சியில் உள்ள சுய உதவி குழுக்கள் தொடர்பான வருகை பதிவேடுகள்

இதனை கிராம சபைக்கூட்ட வருகைப்பதிவேடாக பயன்படுத்த கூடாது.

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல், நடத்துதல்) விதிகள் 1998 விதி எண்: 9 - கூட்டத்தின் நடவடிக்கைகள் வருகை பதிவேட்டில் பதியப்பட்டு முடிவு எடுப்பதற்கு முன் படிக்கப்பட்டு நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

**Rule 9. Attendance register - The attendance of the members of the Grama Sabha shall cause to be recorded in a register maintained for this purpose by the presiding officer of the meeting.**

விதி 9 திருத்தம் - தனி வருகை பதிவேடு மற்றும் மக்கள் பங்கேற்பினைப் புகைப்பட நகல்கள் மூலம் கட்டாயம் பதிவு செய்ய வேண்டும்.

**Rule 9 (amendment) The Presiding Officer shall arrange to record the proceedings of the meeting by means of photographs (G.O. (Ms) No. 130 Rural Development and Panchayat Raj (C4) Department, dated 25.09.2006)**

# கிராம சபைக் கூட்ட தீர்மானங்கள் பதிவேடு
# மினிட் நோட்

# Minutes

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No 10. Minutes - The minutes of the meeting shall be recorded in the same register by the presiding officer and it shall be read out before the conclusion of the meeting and the presiding officer shall then sign it. The minutes of the Grama Sabha meeting shall be placed before the Village Panchayat at its next meeting for consideration and further action.**

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் **1998** விதி எண் : **10** கிராம ஊராட்சி தலைவர்/ தலைமையேற்று கூட்டம் நடத்துபவர், இதற்கான தீர்மான பதிவேட்டில் பதிவு செய்து படித்துக் காட்ட வேண்டும். பின் அதில் தலைமையேற்று கூட்டம் நடத்துபவர் கையொப்பமிட வேண்டும்

# கிராமசபை கூட்டம் காலாண்டுக்கு ஒரு முறை கூட்டுதல் விவாத பொருள்

# கிராமசபை கூட்டம் காலாண்டுக்கு ஒரு முறை கூட்டுதல் மற்றும் விவாத பொருள்

ஏப்ரல் 1 முதல் மார்ச் 31 வரையான நிதியாண்டினை கணக்கில் கொண்டு தமிழக அரசு ஒரு வருடத்தை நான்கு காலாண்டுகளாக கணக்கில் எடுத்துக்கொண்டு நான்கு கிராம சபைக் கூட்டங்களை நடத்துகின்றது. காலாண்டுக்கு ஒரு முறை தேசிய விடுமுறை நாட்களான ஜனவரி 26, மே 1, ஆகஸ்ட் 15, அக்டோபர் 2 ஆகிய 4 நாட்களில் கிராம சபைக் கூட்டம் நடத்த வேண்டும். (அ. ஆ. நிலை எண் 245 ஊ.வ. (ம) ஊ.துறை (சி1) நாள். 19.11.1998)

ஏப்ரல் 1 முதல் ஜூன் 30 வரையான ஏப்ரல், மே, ஜூன் மாதங்களுக்கான முதலாவது காலாண்டிற்கான கிராம சபை கூட்டத்தை தொழிலாளர் தினமான மே 1-ல் நடத்த வேண்டும்.

ஜூலை 1 முதல் செப்டம்பர் 30 வரையான ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களுக்கான இரண்டாவது காலாண்டிற்கான கிராம சபை கூட்டத்தை சுதந்திர தினமான ஆகஸ்டு 15-ல் நடத்த வேண்டும்.

அக்டோபர் 1 முதல் டிசம்பர் 31 வரையான அக்டோபர், நவம்பர் டிசம்பர் மாதங்களுக்கான மூன்றாவது காலாண்டிற்கான கிராம சபை கூட்டத்தை தேச தந்தை மகாத்மா காந்தி பிறந்த தினமான அக்டோபர் 2 -ல் நடத்த வேண்டும்.

ஜனவரி 1 முதல் மார்ச் 31 வரையான ஜனவரி, பிப்ரவரி, மார்ச் மாதங்களுக்கான நான்காம் காலாண்டிற்கான கிராம சபை கூட்டத்தை குடியரசு தினமான சனவரி 26-ல் நடத்த வேண்டும்.

# குடியரசு தின கிராமசபை கூட்டம்

- ஊராட்சியின் வளர்ச்சி பணி தொடர்பாக அடுத்து வரும் நிதி ஆண்டிற்கான திட்ட அறிக்கையினை கிராமசபை கூட்டத்தின் முன் வைத்து ஒப்புதல் பெறுதல் (அ. ஆ. நிலை எண் 245 ஊ.வ. (ம) ஊ.துறை (சி1) நாள். 19.11.1998)

- கிராம ஊராட்சிகளின் வரவு செலவு திட்டம் ஜனவரி 26 கிராம சபை ஒப்புதலுக்கு வைக்க வேண்டும். (அ.ஆ.நிலை எண். 223 ஊ.வ.துறை நாள்.20.10.1999, விதி 1) 3) மற்றும் விதி -4)

- ஒவ்வொரு குடியரசு தினத்தன்றும் சேர்த்தல், நீக்கல் என்ற எல்லா விபரமுமம் உள்ளடக்கிய பதிவேட்டையும் மற்றும் 3 மாதங்களுக்கு ஒரு முறை பயிர்கடன் பற்றிய பயன்தாரர் விபரப்பட்டியலையும் கிராம சபையில் பார்வைக்கு வைக்க வேண்டும். அ.ஆ.(3 (டி) எண். கூட்டுறவு, உணவு மற்றும் நுகர்வோர் பாதுகாப்பு (எப் 1) துறை நாள் 31.01.2008

- ஏற்கனவே நடைபெற்ற கிராம சபை கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள், அதன்மீது எடுக்கப்பட்ட மேல் நடவடிக்கைள் இந்த கிராம சபை கூட்டத்தில் தொடந்து நடவடிக்கைகள் எடுப்பதற்காக படிக்கப்பட வேண்டும்.

# தொழிலாளர் தின கிராமசபை கூட்டம்

- அரசின் பல்வேறு வளர்ச்சி திட்டப்பணிகளின் கீழ் பயன்பெறும் பயனாளிகள் பட்டியல் மற்றும் ஊராட்சிகள் ஒப்புதல் அளித்த வளர்ச்சிப் பணிகள் கிராம சபைக் கூட்டத்தில் வைக்கப்படுதல். (அ. ஆ. நிலை எண் 245 ஊ.வ. (ம) ஊ.துறை (சி1) நாள். 19.11.1998)
- ஒவ்வொரு 3 மாதங்களுக்கு ஒரு முறை பயிர்கடன் பற்றிய பயன்தாரர் விபரப்பட்டியலையும் கிராம சபையில் பார்வைக்கு வைக்க வேண்டும். அ.ஆ.(3 (டி) எண். கூட்டுறவு, உணவு மற்றும் நுகர்வோர் பாதுகாப்பு (எப் 1) துறை நாள் 31.01.2008
- ஏற்கனவே நடைபெற்ற கிராம சபை கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள், அதன்மீது எடுக்கப்பட்ட மேல் நடவடிக்கைகள் இந்த கிராம சபை கூட்டத்தில் தொடந்து நடவடிக்கைகள் எடுப்பதற்காக படிக்கப்பட வேண்டும்.

# சுதந்திர தின கிராமசபை கூட்டம்

- வறுமை ஒழிப்புத் திட்டம் உட்பட அனைத்து துறைகளிலும் மேற்கொள்ளப்படும் திட்டங்களினால் தனிநபர் மற்றும் சமுதாயத்தினர் ஒவ்வொரு திட்டத்தின் கீழும் பயன்பெறும் தன்மையினை எடுத்துரைத்தல்) (அ. ஆ. நிலை எண் 245 ஊ.வ. (ம) ஊ.துறை (சி1) நாள். 19.11.1998)
- ஒவ்வொரு 3 மாதங்களுக்கு ஒரு முறை பயிர்கடன் பற்றிய பயன்தாரர் விபரப்பட்டியலையும் கிராம சபையில் பார்வைக்கு வைக்க வேண்டும். அ.ஆ.(3 (டி) எண். கூட்டுறவு, உணவு மற்றும் நுகர்வோர் பாதுகாப்பு (எப் 1) துறை நாள் 31.01.2008
- ஏற்கனவே நடைபெற்ற கிராம சபை கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள், அதன்மீது எடுக்கப்பட்ட மேல் நடவடிக்கைள் இந்த கிராம சபை கூட்டத்தில் தொடந்து நடவடிக்கைகள் எடுப்பதற்காக படிக்கப்பட வேண்டும்.

# மகாத்மா காந்தி
# பிறந்த நாள்
# கிராமசபை கூட்டம்

# மகாத்மா காந்தி பிறந்த நாள் கிராமசபை கூட்டம்

- ஊராட்சி மற்றும் அரசின் இதர துறைகள் மேற்கொள்ளும் வளர்ச்சி பணிகள் குறித்து இடைநிலை ஆய்வு மேற்கொள்ளல். அரசாணை (நிலை) எண் **245** ஊரக வளர்ச்சி **(சி1-)** துறை நாள் **19.11.1998**
- ஊராட்சியின் முந்தைய ஆண்டிற்கான ஆண்டறிக்கை மற்றும் வரவு செலவு கணக்கின் மீதான தணிக்கை குறிப்புகள் கிராம கூட்டத்திற்கு முன் சமர்ப்பித்தல். அரசாணை (நிலை) எண் **245** ஊரக வளர்ச்சி **(சி1-)** துறை நாள் **19.11.1998**
- ஒவ்வொரு **3** மாதங்களுக்கு ஒரு முறை பயிர்கடன் பற்றிய பயன்தாரர் விபரப்பட்டியலையும் கிராம சபையில் பார்வைக்கு வைக்க வேண்டும். அ.ஆ.**(3** (டி) எண். கூட்டுறவு, உணவு மற்றும் நுகர்வோர் பாதுகாப்பு (எப் **1)** துறை நாள் **31.01.2008**
- ஏற்கனவே நடைபெற்ற கிராம சபை கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள், அதன்மீது எடுக்கப்பட்ட மேல் நடவடிக்கைகள் இந்த கிராம சபை கூட்டத்தில் தொடந்து நடவடிக்கைகள் எடுப்பதற்காக படிக்கப்பட வேண்டும்.

# கிராம சபைக் கூட்டத்தில் கட்டாயம் கலந்துக்கொள்ள வேண்டிய குறைந்த நபர்கள் எண்ணிக்கை கோரம் குறைவெண் வரம்பு

(விதி 4) கிராம சபை கூட்டம் நடத்துவதற்கு மக்கட்தொகையில் 10-ல் ஒரு பங்கிற்கு குறையாமல் குறைவெண் வரம்பு இருக்க வேண்டும். (அ.ஆ.நிலை எண். 130 ஊ.வ.(ம) ஊ. துறை (சி4) நாள். 25.09.2006 ன்படி குறைவெண் வரம்பு மக்கள் தொகைக்கு ஏற்ப மாற்றப்பட்டுள்ளது). விதி திருத்தம் அ.ஆ.நிலை எண்.130 ஊ.வ.(ம) ஊ.துறை (சி4) நாள்.25.09.2006

- கிராம சபை கூட்டம் கூட்டுதல், நடத்துதல் மற்றும் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டியவர்களின் குறைவெண் வரம்பு (அ.ஆ.நிலை எண் 150 ஊ.வ.துறை (சி1) நாள். 17.07.1998 மற்றும் தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் 1994,8.1.3)
- கிராம சபை கூட்டம் கூட்டுதல், நடத்துதல் மற்றும் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டியவர்களின் குறைவெண் வரம்பு விதிகள் அ.ஆ.நிலை எண் 150 ஊ.வ. துறை (சி1) நாள். 17.07.1998 என்ற அரசாணையின் விதி -9 ,4 ,2க்கு கீழ்க்கண்டவாறு விதி திருத்தம் செய்யப்பட்டுள்ளது.
- விதி 2 திருத்தம் - ஊராட்சியின் எல்லைக்குள் அமைந்த ஒவ்வொரு வார்டிலும் சுழற்சி முறையில் ஊராட்சியின் ஆய்வாளரால் கிராம சபை நடத்த நிர்ணயிக்கப்பட்ட நாளில் காலை முற்பகல் 11 மணிக்கு கிராமசபை நடத்தப்பட வேண்டும்.

- விதி 4 குறைவெண் வரம்பிற்கு விதி திருத்தம் . மக்கள் தொகை குறைவெண் எண். வரம்பு 500 1 வரை 501 50 முதல் 3000 வரை 3001 100 முதல் 10000 வரை 200 -10001க்கு மேல் 300 வ. 4 3 2
- கூட்டம் தொடங்கிய 2/1 மணி நேரத்திற்குள் கோரம் இல்லையெனில் அக்கூட்டம் ஒத்திவைக்கப்பட வேண்டும். மீண்டும் கூட்டம் நடைபெறும் நாள் அறிவிப்பு செய்ய வேண்டும். (விதி 5) .
- கிராம சபை கூட்டத்தில் கலந்துகொள்ளும் உறுப்பினர்களில் 3/1 பங்குக்குக் குறையாமல் மகளிர் இடம் பெற வேண்டும்.
- கிராம ஊராட்சியின் மொத்த மக்கட்தொகையில் ஆதிதிராவிடர்/பழங்குடியின பிரிவினரின் விகிதாச்சாரம் எதுவோ அதே விகிதாச்சாரத்தின் அடிப்படையில் அவ்வுறுப்பினர்கள் பங்குபெற வேண்டும்.

தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல் , நடத்துதல்) விதிகள் 1998 விதி எண்: 4

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No 4. Quorum for a meeting - No subject shall be taken up for deliberation at a meeting of the Grama Sabha unless there be present one/tenth of the total number of the members of the Grama Sabha.**

**தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல், நடத்துதல்) விதிகள் 1998 விதி எண்: 5**

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No 5. Adjournment of the meeting - If within half an hour after the time appointed for the meeting, the requisite quorum is not available, the meeting shall stand adjourned to a date and time to be notified to the members by the presiding officer.**

# கிராம சபை நடத்த செலவினம்

கிராம சபை கூட்டம் நடத்துவதற்கான செலவினங்களை ஊராட்சி மன்ற ஒப்புதலுடன், அதிகபட்சமாக ரூ.1000/- (ரூபாய் ஆயிரம் மட்டும்) செலவினம் மேற்கொள்ள ஊராட்சி தலைவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. 3- வது உயர்மட்டக்குழு M.K.Stalin Committee பரிந்துரைப்படி, அரசாணை (நிலை) எண் 160 ஊரக வளர்ச்சி (சி-1) துறை நாள் 30.09.2008

கூட்ட செலவுகள் தொடர்பான அரசாணைகள் 1. அரசாணை (நிலை) எண் 160 ஊரக வளர்ச்சி (சி-1) துறை நாள் 30.09.2008 (செலவினம் ரூ 1000)

2. அரசாணை (நிலை) எண் 76 ஊரக வளர்ச்சி (சி-1) துறை நாள் 26.03.2000 (செலவினம் ரூ 500) (இந்த அரசாணை தற்சமயம் நடைமுறையில் இல்லை. அரசாணை (நிலை) எண் 160 ஊரக வளர்ச்சி (சி-1) துறை நாள் 30.09.2008-ன் படி செலவினம் ரூ 1000 ஆக உயர்த்தப்பட்டுள்ள அரசாணை நடைமுறையில் உள்ளது)

கிராம சபை தொடர்பான பதிவேடுகள்

- வருகை பதிவேடு
- அஜெண்டா பதிவேடு
- தீர்மான பதிவேடு
- பல்வேறு துறைகளின் மூலம் செயல்படுத்தப்படும் திட்டப் பயனாளிகள் விபரம்
- ஊராட்சிகளில் கணக்கு தலைப்பு வாரியான வரவு செலவின் விபரம்

- ஊராட்சி கணக்குகளின் ஆண்டறிக்கை,
- ஊராட்சி கணக்குகளின் தணிக்கை அலுவலர் தணிக்கை குறிப்பு
- ம.கா.தே.ஊ.வே.உ.திட்டம் தொடர்பான அனைத்து வரவு செலவின் பதிவேடுகள்
- மற்றும் அரசால் அவ்வப்போது கிராம சபை ஒப்புதலுக்கு வைக்கப்பட வேண்டிய பொருள் சார்ந்த ஆவணங்கள் ஆகும்

# கிராம சபை பற்றி உயர் அதிகார மையங்களுக்கு அனுப்ப வேண்டிய அறிக்கைகள்

கிராம சபைக் கூட்டம் தொடர்பாக ஊராட்சி தலைவர் பற்றாளர் மாவட்ட ஆட்சியர் ஊரக வளர்ச்சி துறை இயக்குநர் போன்ற அதிகார மையங்கள் கட்டாயம் அறிக்கை அனுப்ப வேண்டிய நிலையில் உள்ளார்கள்.

**1. கிராம ஊராட்சி மன்ற தலைவர்கள் மாவட்ட ஆட்சியருக்கு அறிக்கை**

கிராம சபைக் கூட்டம் முடிந்த 3 நாட்களுக்குள் கிராம ஊராட்சி மன்ற தலைவர்கள் கிராம சபையில் எடுக்கப்பட்ட முடிவுகள் தொடர்பான அறிக்கையினை கிராம சபைக் கூட்ட தீர்மானங்கள் நகலை இணைத்து வட்டார வளர்ச்சி அலுவலர் (கிராம ஊராட்சி) மூலமாக ஊராட்சிகளின் ஆய்வாளரான மாவட்ட ஆட்சியருக்கு அனுப்பி வைக்க வேண்டும் ( தமிழ்நாடு கிராம சபை ( கூட்டம் கூட்டுதல், நடத்துதல்) விதிகள் 1998 விதி எண் - 11)

**The Tamil Nadu Grama Sabha (Procedure for convening and conducting of meeting) Rules, 1998 Rull No 11. Submission of the minutes - A copy of the minutes of the meeting shall be submitted to the Inspector within three days of the date of the meeting.**

## 2. ஊரக வளர்ச்சி துறை இயக்குநருக்கு மாவட்ட ஆட்சியர்கள் அறிக்கை

கிராம சபைக் கூட்டம் முடிந்த ஒரு வார காலத்திற்குள் மாவட்ட ஆட்சியர்கள் மாவட்டம் முழுவது கிராசபைக் கூட்டத்தில் நடைபெற்ற விபரங்கள் அடங்கிய விரிவான அறிக்கையை ஊரக வளர்ச்சி துறை இயக்குநருக்கு அனுப்பி வைக்க வேண்டும் அரசாணை (நிலை) எண் **245** ஊரக வளர்ச்சி **(சி-1)** துறை நாள் **19.11.1998**

## 3. தமிழக அரசுக்கு ஊரக வளர்சி துறை இயக்குநர் அறிக்கை

கிராம சபைக் கூட்டம் முடிந்த ஒரு வார காலத்திற்குள் மாவட்ட ஆட்சியர்கள் மாவட்டம் முழுவது கிராசபைக் கூட்டத்தில் நடைபெற்ற விபரங்கள் அடங்கிய விரிவான அறிக்கையை ஊரக வளர்ச்சி துறை இயக்குநருக்கு அனுப்பி வைக்க வேண்டும். ஊரகவளர்சி துறை இயக்குநர் தமிழகம் முழுவதும் உள்ள மாவட்டாட்சியர்கள் அறிக்கை ஒருங்கிணைத்து காலாண்டிற்கு ஒரு முறை தமிழக அரசுக்கு ஊரக வளர்ச்சி துறை முதன்மை செயலாளர் மூலமாக அனுப்பி வைக்க வேண்டும் அரசாணை (நிலை) எண் **245** ஊரக வளர்ச்சி **(சி-1)** துறை நாள் **19.11.1998**

## 4. பற்றாளர் அறிக்கை

கிராம சபைக் கூட்டம் முடிவடைந்த **72** மணி நேரத்திற்குள் பற்றாளர் தன்னுடைய அறிக்கையை மாவட்டாட்சியருக்கு கட்டாயம் அனுப்பி வைக்க வேண்டும்.

